

# பேரின்ப வேட்கை

சற்குரு தாசன்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
இலக்கியப் பதிப்பகம்
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1

12-1-1972

விலை 50 காசு

# பிரார்த்தனை

பரம சற்குருவே!

1. உம்மை மறக்கச் செய்யும் எந்த ஒரு பொருளும் என்னை யணுகா தொழிக.
2. உமது திருவருளை நினைவூட்டும் ஓர் அற்பப் பொருளையும் யான் போற்றி மகிழ் வேனாக.
3. காமமாதி கொடும் பேய்களெல்லாம் என் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளா வண் ணம் நீர் காத்தளிப்பீராக.
4. கருணையாம் உமது அருள் வெள்ளத்தில் யான் அமிழ்ந்து மூழ்குவேனாக.
5. செய்யும் செயல்களுக்கு யான் அதிகாரி இல்லை என்று உணர்த்துவீராக.
6. நன்மையும், தீமையும் நாயகன் அருள் என்று நாடுவேனாக.
7. புன்மைதரு புவனப் பொருள்களையெல் லாம் விரும்பாது ஒழிவேனாக.
8. கொலைஞராயினும் உமது அடியாரை நீர் என எண்ணிப் போற்றுவேனாக.
9. என் உடல் பொருள் ஆவி அனைத்தையும் உமக்கே அர்ப்பணம் செய்தேன்.
10. ஏன்றெனைக் காப்பீர்! காப்பீர்!! காப்பீர்!!!

ஆண்டவர் அருள்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# பேரின்ப வேட்கை

சமர்ப்பணம்

எல்லாம் வல்ல, எங்கும் நிறைந்த, சமயம், மொழி, மதம் யாவற்றையும் கடந்த இறைவனுக்கு இந்நூலை அர்ப்பணிக்கின்றேன்.

சற்குரு தாசன்

விரோதிகிருது ஆண்டு மார்கழி மீ 28உ (12-1-1972) புதன்கிழமை
அனுஷ விண்மீனில் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின்
49 வது திருநாள் விழாவில்
இரெட்டியப்பட்டியில் ஸ்ரீ குருநாதர் சந்நிதியில்,

வெளியிடுவோர் :-

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
இலக்கியப் பதிப்பகம்

அடியார்கள் இல்லம்' ‘தொலை பேசி எண் : 34600’
32. கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.

பதிப்பக வெளியீடு : 3 விலை 50 காசு



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# குருநாதர் அருட்சட்டம்

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவுருச் சிந்திப்ப தாமே

—திருமூலர் திருமந்திரம்

பூவுலகில் தோன்றி வாழும் உயிர்கள், வாழ வேண்டிய முறையறிந்து வாழ்வது நலம் மிகப் பயக்கும். வாழ வேண்டிய முறைகளை நன்கு உணர்ந்து, செந்நெறி காட்டிய அருட் பெரியார்கள் அனைவரும் கூறியுள்ள பேருண்மைகள் அனைத்தையும் நுணுகியுணர்ந்து, அவற்றின் சாரம் அனைத்தையும் ஒருங்கு திரட்டி 'அருட்சட்டம்' என்ற பெயரில், நாடு, இனம், மதம், மொழி, கல்வி, தொழில், பொருள், ஊதியம், வயது முதலிய எந்தவித பேதமும் இன்றி, அனைத்துயிர்க்கும் பொதுவாக வழங்கியருளி, அருளர சாட்சி புரிந்து விளங்குபவர் சற்குரு நாதராம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளாவர். அவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் கோவில் பட்டிக்கு 28 மைல் தொலைவில் உள்ள நாகலா புரத்தை அடுத்த இரெட்டியப்பட்டி என்னும் திருத்தலத்தில் **'சுப்ரமண்யம்'** என்னும் பெயரோடு (16-9-1856 ல்) நள ஆண்டு புரட்டாசி 2 ல் இரேவதி நன்னாளில் தோன்றியருளினார்கள். இளம் வயதில் கல்வி கற்று, விவசாயம், வாணிபம் முதலிய தொழில் களில் ஈடுபட்டு மதுரை மாநகர் சேர்ந்து அருள் நெறி

போற்றி இறைவன் (ஸ்ரீ பரிபூர்ண விநாயகர்) திருக்காட்சி கண்டு, பொதிகை மாமலையில் பல்லாண்டு அருந்தவம் புரிந்து அருட் பரிபூர்ணம் பெற்று, கற்றாரும் கல்லாரும், வறிஞரும் செல்வரும், இளைஞரும் முதியரும் எவ்விதத் தடையுமின்றி நாளும் கடைப்பிடித்து உய்யத்தக்க பொது நெறியை-எல்லா மதங்களின் சாரமாக விளங்கும் செந்நெறியை—உலகுக்கு வழங்கி யுள்ளார்கள். அந்நெறி கடைப் பிடிக்கும் அனைவருக் கும் அரும் பெருந் துணையாய் விளங்கி, அத்தூய அருள் நெறியில் நடத்திச் சென்று உய்வளித்துப் பேரின்ப மூட்டித் திகழ்கின்றார்கள்.

அவர்கள் வழங்கியுள்ள அருட் சட்டக் கொள்கையின் சுருக்கம் வருமாறு :-

1. ஒவ்வொரு நாளும் விடியற்காலை 4 மணிக்கு மேல் 5 மணிக்குள் பச்சை நீரில் முழுக வேண்டும். தலை நனைய நீராட வேண்டும்.

2. குடிக்கவோ, குளிக்கவோ, எக்காரணம் கொண்டும் வெந்நீரைப் பயன் படுத்தலாகாது.

3. நீராடி முடிந்ததும், விநாயகர் கோவிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து, மனமுருகி வழிபட்டு வணங்க வேண்டும். [எந்த மதத்தினராயினும், தத்தமக்குரிய வழக் கப்படி வழிபாடு செய்யலாம்.] தண்ணீரில் திருநீறும் துளசி யும் இட்டு உள்ளுக்குப் பருக வேண்டும்.

4. உலகெலாம் படைத்துக் காக்கும் ஒரு பரம் பொருளைப் பல மதத்தினர் பல உருவங்களில் வழிபட்டுப் பயனடைகின்ற னர்; ஆனால் பரம்பொருள் ஒருவரே என்ற தீர்மானமான எண்ணம் கொள்ள வேண்டும். எந்த மதத்தினையும் நிந்தித் தல் கூடாது.

5. புலாலுண்ணல், பொய் பேசல், கள் குடித்தல், சூதாடுதல், திருடுதல், புகைபிடித்தல், புகையிலை முதலிய

லாகிரி வஸ்துக்களைப் பயன்படுத்துதல் பொல்லாரோடு உறவாடுதல் முதலியன செய்தல் ஆகாது.

6. எந்நோய் வரினும், எத்துயர் வரினும், எத்தகைய சிக்கல் ஏற்படினும், ஒரு மருத்துவரையோ, ஒரு மனிதரையோ தஞ்சம் என்று அடையாது, எல்லாம் வல்ல இறைவனையே தஞ்சம் எனப் பற்றி, உறுதியாக நின்று, உயர் பயன் பெறுதல்.

7. நோயுற்ற காலை இருவேளை பச்சை நீரில் முழுகித் திருநீறு பூசி, திருநீறும் துளசியும் இட்ட தீர்த்தம் அருந்தி மனமுருகி இறையருளை நாடி, அவனருள் துணையால் நோய் நீக்கம் பெற்றுப் பயனடைய வேண்டும். விஷக்கடி, வெட்டு ரணம், பிரஸவம் முதலிய எதற்கும் மருத்துவம் நாடாது, திருநீறு, தீர்த்தம் கொண்டே அருட்பயன் காண வேண்டும்.

8: வைத்தியம், ஜோதிடம், மாந்திரிகம் இவைகளை நம்பி ஏமாறுமல், மருந்து, மணி, மந்த்ரம் முதலியன மருவாமல், 'எல்லாம் வல்ல கடவுளே கதி, என்ற பரிபூர்ண நம்பிக்கையோடு, தளராத நெஞ்சத்துடன், இறைவனருள் நாடி அருளாற்றலால் அனைத்து இடுக்கண்களையும் வென்று நற் பயன் பெறுதல்.

9. இந்தத் தீது அகன்ருல், இந்த நன்மை கைகூடினுல் இன்னது செய்கிறேன் என்று தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் பழக்கத்தைக் கைவிடுதல்.

10. வெள்ளிக்கிழமை தோறும் ஒரு வேளையாவது உணவைக் குறைத்துக் கொண்டு, விரதம் இருந்து பயில வேண்டும்.

11. எப்போதும் ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்த வண்ணம், உடல் பொருள் ஆவி அனைத்தையும் உடையவனிடம் ஒப்படைத்து, அச்சமும் பற்றும் அணுவளவும் இன்றி, அருள் வாழ்வு வாழப் பழகுதல் வேண்டும்.

12. தினந்தோறும் ஆண்டவர் அருளை வேண்டி, எந்தப் பிற எண்ணமும் இன்றி, அமைதியாக அமர்ந்து, அருள் நிட்டை பேணி, ஆனந்தம் எய்தப் பழக வேண்டும்.

13. சட்ட அனுட்டானத்தில் உள்ளவர்களில் யாருக்காவது உலகில் உலாவும் காலம் முடிந்து உயிர் அடக்கமாக நேர்ந்தால், அதற்காக வருந்தாது, அவர்களின் உடலை எரிக்காது, மண் மறைவு (சமாதி) செய்தல் வேண்டும்.

14. உலக விவகாரங்களில் சிக்கல்கள் நேரும்போது, அறக்கடலாகிய இறைவனின் அருள் துணை நாடி அற முடிவைப் பெற முயலவேண்டுமேயன்றி, அறமன்றம் நாடி விவகாரங்களை விபரீதமாக வளர்த்துக் கொள்ளுதல் கூடாது.

15. சட்ட நெறியில் ஈடுபட்டுள்ளோர் தவறி நடந்தால் அவர்கட்கு அறிவுறுத்தத் திருவருளால் உடல் உபாதி முதலிய தண்டனை ஏற்படலாம். அவர்கள் உடனே உண்மையை உணர்ந்து, தவறு புரிந்தமைக்கு மன்னித்து அருள் புரியுமாறு இறைவனை உருகி நினைந்து வேண்டிக் கொண்டால், உடனே பரிஹாரம் ஏற்படும். ஏற்பட்ட தண்டனை நிவர்த்தியாகும்.

16. 'வேலைக்கு ஏற்ற கூலி' என்பது போல், எந்த அளவு உறுதியும் ஊக்கமும் கொண்டு கைப்பற்றுகிறோமோ, அந்த அளவுக்குக் கைமேல் பயன் கிட்டுவதையும், தூய நல்வாழ்வு அமைவதையும், இறைவன் அருள் முன்னின்று எல்லா வகைக்கும் வழிகாட்டி அழைந்துச் செல்வதையும், நாம் நன்கு உணர்ந்து அருள்துணை கொண்டு முன்னேற லாகும்.

ஆண்டவர் அருட்சட்டத்தில் ஈடுபட்டிருப்பதையும், அதனால் ஏற்படும் நன்மைகளையும், முன்னேற்றத்தையும், அவர் அருளால் நிகழும் அற்புதங்களையும், பெருமையாகவோ, பிறர் மெச்சிக் கொள்ளவோ, வெளியிட்டுக் கூறுதல் ஆகாது. இரகசியமாக உள்ளத்துள் வைத்துப் போற்றி

உய்வு பெறுதல் வேண்டும் எனச் சுவாமிகள் அருளியுள்ளார்கள் என்பது விளங்குகிறது.*

இவ்வாறு மிக உயர்ந்த அருட்பெரு நெறியை மாபெருங் கருணையால் உலகுக்கு வகுத்து வழங்கிய சுவாமிகள், ஆங்காங்கும் பக்குவம் பெற்ற அடியார் பலரின் இருப்பிடம் நாடிச் சென்று ஆட்கொண்டு அருள் புரிந்து அவர்களின் நல்வாழ்விற்கு அருந்துணையாய் நின்று ஊக்கி வரலானார்கள். கி. பி. 1923 ஜனவரியில், துந்துபி ஞு மார்கழி மீ 28 உ வெள்ளிக்கிழமை ஏகாதசி திதி அனுட நன்னாளில் உடையவனோடு இரண்டறக் கலந்தனர். சுவாமிகள் தரைமீது அவதரித்த அதே இடத்தில் அவர்கள் திருமேனி அடக்கம் செய்யப் பெற்று, திருக்கோயில் அமைக்கப் பெற்றுள்ளது.

உலகினர் கண்ணுக்குத் தோன்றாது மறைந்தருளிய பின்பும் சுவாமிகள் அருட்சட்ட அடியவர்க்கும் அன்பர்கட்கும் என்றென்றும் துணையாயிருந்து அருளாட்சி புரிந்து பேணி வரும் அற்புதத்தை அனைவரும் இன்றும் அனுபவத்தில் அறிந்து ஆனந்த முறுவது உண்மையிலும் உண்மை.

ஆதலால், நல்வாழ்வு விரும்பும் அனைவரும் இந் நன்னெறியைக் கடைப்பிடித்து உடல் நலம், உளநலம், உயிர் நலம் ஆகிய அனைத்தும் எய்தி எல்லாம் வல்ல ஸ்ரீ குருபரம் பொருளின் அருட்பெருங் கருணை பெற்றுய்யக் கோருகிறோம்.

இங்ஙனம்,

**ஸ்ரீ இரெட்டிப்பட்டி சுவாமிகள்**
**இலக்கியப் பதிப்பகம்**
32. கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.

---

* சுவாமிகளின் வரலாறும், அருட்சட்டத்தின் விவரங்களும் இன்னும் விரிவாக அறிய விரும்புவோர் '**வழிகாட்டும் வான் பொருள்**' என்ற நூலிற் காணலாம்.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# பதிப்புரை

எல்லா உயிர்களும் இன்பம் பெற விழைகின்றன. நாம ரூபங்கட்கு உட்பட்ட அழியும் பொருள்களில் இன்பம் உளதென விரும்பி அலைந்து ஏமாற்றம் அடைகின்றன. பேரறிவு பெற்ற பேரருளாளர்கள் பொய்ப் பொருள்களில் இன்பம் இல்லை என்றும், மெய்ப் பொருளாகிய இறைவனால் பெறக்கூடிய பேரின்பமே உண்மையான இன்பம் என்றும் அனுபவத்தால் உணர்ந்து அனைத்துயிர்கட்கும் விளக்கி யுள்ளனர்.

எல்லா உலகங்கட்கும், எல்லாப் பொருள்கட்கும், எல்லா உயிர்கட்கும் தலைவனாகிய பரம் பொருளுடன் தொடர்பு கொள்ளவேண்டிய முறைகளை நான்கு வகையாகக் கூறி யுள்ளனர். அடிமை, பிள்ளை, நேசன், நாயகி என்னும் முறைகளே அவை. இவற்றை தாச மார்க்கம், சற்புத்ர மார்க்கம், சஹ மார்க்கம், சந்மார்க்கம் என வடமொழியில் கூறுவர். இவற்றுள் நான்காவதான சந்மார்க்கமே சாலச் சிறந்ததாகும் என்பது ஆன்றோர் துணிபு. இதனை அகத்துறை என்றும் கூறுவதுண்டு.

1. அத்துறையில் இறைவனாகிய நாயகனின் பேரின்பத்தை நுகர வேண்டித் தாபமுற்றுத் தவிக்கும் ஜீவாந்மா ஆகிய நாயகி உள்ளம் உருகி உருகி, வேதனை தாங்க மாட்டாமல், தன் தோழிகளுள் தலை சிறந்தவளும், அந்தரங்கமான விஷயங்களைப் பற்றிக் கலந்து உரையாடற்கு உரியவளு மாகிய உயிர்த்தோழியிடம் கூறி வருந்தி, அவளைத் தூதாகச் சென்று, நாயகனாகிய இறைவனை அழைத்து வரும்படிக் கூறுவதே இந்நூலில், '**அழைத்து வாடி என்னுயிர்த்தோழி**' என்று தொடங்கும் முதற் பாடலாகும்.

2. எவ்வளவு கடைப்பட்ட உயிரையும் தம் ஒப்பற்ற பெருங்கருணைத்திறத்தால் தடுத்தாட்கொண்டு பேரின்பம் ஊட்டுவது இறைவனது பேரருட்பாங்காகும். ஆசையாணவ அழுக்குகளால் காமாதிகளில் மூழ்கிக் கிடந்த தன்னையும் பேரின்ப அமுதம் துய்க்குமாறு அழைத்தருளத் திருவுளம் கொண்ட இறைவனின் தனிப்பெருங் கருணையை வியந்து வியந்து உளம் கசிந்துருகிப் போற்றும் நிலையில் **'பூவுலகின் குருவே'** என்று தொடங்கும் இரண்டாம் பாடல் அமைந்துள்ளது.

3. பேரின்பத்தை நுகர விழையும் ஜீவாத்மாவின் மனம் தூய்மை பெற்று அடங்கி ஒடுங்க வேண்டும். ''மனமாம் கடலில் எண்ண அலைகள் அடங்க வேண்டுமானால், உள்ளே உள்ள குண்டலி சக்தியை வசப்படுத்த வேண்டும்; அது தலை கீழாகத் தொங்கிக்கொண்டுள்ளது; இறை இன்பம் விழைவோர் அதனை நிமிர்த்தி, விஷத்தைக் கக்கா வண்ணம் தடுத்து, தம்வசப்படுத்தி, அதன்துணையும் உடன் கொண்டு, பாரமார்த்திக வழியில் சென்று பயன்பெற வேண்டும்'' என யோக நூலோர் கூறுவர். அத்துறையில் குருநாதரின் அருளாணையின்படி நிமிர்ந்து சற்றே ஆடி அடங்கிப் பேரின்ப வழிக்குத் துணை புரியுமாறு குண்டலி சக்தியிடம் ஜீவாத்மா கூறும் வகையில் அமைந்துள்ளது **'ஆடு பாம்பே'** என்று தொடங்கும் மூன்றாவது பாடலாகும்.

4. ஜீவாத்மாவாகிய தலைவி, பரமாத்மாவாகிய தன் நாயகன் பால் கொண்டுள்ள பேரின்ப தாகம் மேலிட்டு அந் நாயகனை எண்ணி எண்ணி இதயம் கசிந்து, மனம், அறிவு முதலான பாங்கியர்களிடம் நாயகனின் உயர்வு பற்றியும், அவர் அருட்காட்சி கிடைக்கத் தாமதம் ஏற்படுவதால் உண்டாகும் ஏக்கம் பற்றியும், எப்படியும் அவர்வந்து பேரின்பம் ஊட்டுவார் என்று நாயகன்பால் கொண்டுள்ள தன் பூர்ணமான நம்பிக்கை பற்றியும் கூறுவதே **'பாங்கி மாரே-1'** என்ற தலைப்பில் அமைந்துள்ள நான்காவது பாடலாகும்.

5. பரமாத்மா வாகிய நாயகன் எழுத்தருளிப் பேரின்பம் ஊட்டப் போகிறுர் என்ற குறிப்பை திருவருளால் உணர்ந்த

ஜீவாத்மாவாகிய நாயகி, அகக்கரணங்கள், புறக்கரணங்கள் ஆகிய பாங்கியர் அனைவர்க்கும், அவர்கள் ஆண்டவர் எழுந் தருளுங்கால் செய்ய வேண்டிய அருட்பணிகளைக் கூறி எச்சரிக்கும் வகையில் அமைந்துள்ளது **'பாங்கிமாரே-2'** என்ற தலைப்புடைய ஐந்தாவது பாடலாகும்.

6. ஜீவாத்மா தன் **உடல், பொருள், ஆவி மூன்றையும்** எல்லாம்வல்ல தலைவனாகிய ஸ்ரீ குருபரம் பொருளிடம் மனப் பூர்வமாக ஒப்படைத்து, அப்பெருமானின் கருணைப்பெருங் கடலில் ஒரு சிறு துளியாவது அளித்தருளும் வண்ணம் பிரார்த்திக்கும் முறையில் அமைந்துள்ளது ஆறுவது பாட லாகும்.

7. பரமாத்மாவின் திருவருட் புகழைக் கூறிப் போற்றி அருட்காட்சி யருளுமாறும், அடிமலரிற் சேர்த்துக் கோள்ளு மாறும் பிரார்த்திக்கும் வகையில் **'தண்ணருள் செய்வாய்'** என்று தொடங்கும் ஏழாம் பாடல் அமைந்துள்ளது.

8. ஜீவாத்மா, தன்னுள் ஒளிரும் பரமாத்மாவை விளித்து, அவர் அருட்சிறப்பைக் கூறியும், அவர் தனக்கு அருள் புரிந்த கருணைத்திறத்தினை வியந்து போற்றியும் இன்பு றும் நிலையில் அமைந்துள்ளது **'அந்தராத்மனே'** என்று தொடங்கும் எட்டாம் பாடலாகும்.

9. இறைவன் திருக்காட்சியைக் கண்டு உய்வதற்கு அவசியமாகிய ஞானக்கண் அருளுமாறு ஸ்ரீகுருபரம்பொருளி டம் குறையிரந்து பிரார்த்திக்கும்வகையில் அமைந்துள்ளது **'ஞானவிழியருளுவாய்'** என்று தொடங்கும் ஒன்பதாம் பாட லாகும்.

10. எல்லாம் வல்ல ஸ்ரீகுருபரம் பொருளின் திருவடிச் சிறப்பை எண்ணி எண்ணிப் போற்றித் துதித்துக் களிக்கும் வகையில் அமைந்துள்ளது **'அருள் வடிவாய் ஒளிர் பாதம்'** என்று தொடங்கும் பத்தாம் பாடலாகும்.

11. அருளே வடிவாய் அவனியிற் போந்து அருட் கருணைபாலித்தருளும் ஸ்ரீசற்குருநாதரின் சரணாரவிந்தங்களைப் போற்றிப் பணிந்து அடைக்கலம் புகும்வகையில் அமைந்

துள்ளது **'சரணம் சரணம்'** என அமைந்துள்ள பதினோரா வது பாடலாகும்.

அருள் திரு 'சற்குருதாசன்' அவர்கள் பல நாட்களாக இயற்றிவரும் பாடல்களை அச்சிட்டால் பலர்க்கும் பயன் படுமே என்று எண்ணியதுண்டு. ஒரு சில பாடல்களை சுவாமி களின் 49வது திருநாள் விழாவில் அச்சிட்டு வெளியிடத் துணைபுரிந்த திருவருளுக்கும், இந்நூல் ஆசிரியருக்கும், இந் நூல் வெளிவர உதவி புரிந்த அனைவருக்கும், இந்நூலைக் குறைந்த காலத்தில் நன்கு அச்சிட்டுதவிய சூப்பர்பவர் அச் சகத்தினர்க்கும் எமது பணிவும் நன்றியும் தெரிவித்துக் கொள்வதுடன், இப்பாடல்களை அன்புடன் பாடி அருள்வாழ் வாற்றிப் பேரின்பம் பெற்றுய்யுமாறு அடியவர் அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

அருட்சட்டச் செந்நெறி எங்கும் பரவி அருள்நலம் கொழிக்கவும், எல்லாஉயிரும் இன்புற்று வாழவும் திருவருள் புரியுமாறு எல்லாம் வல்ல சத்குருநாதராம் ஸ்ரீ இரெட்டியப் பட்டி சுவாமிகளின் இணையடிமலர்களை இறைஞ்சுகின்றோம்.

வாழ்க குருவருள் ! வளர்க வளமெலாம் !!

| | |
|---|---|
| இருடியர்பட்டி<br>12-1-1972<br>விரோதிகிருது மார்கழி 28<br>அனுட நன்னாள் | இங்ஙனம்<br>**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்**<br>இலக்கியப் பதிப்பகத்தினர். |

# உள்ளுறை



# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்



பரம ஏழைகளும் பக்குவம் பெற அருள்ஞானச் சட்டத்தை இவ்வுலகிற்கு அருளிய குருபரம் பொருளின் திருவருள் பெருமையை இவ்வுலகில் பரப்புவான் வேண்டி, அக்குரு அருளாலே இப் பதிப்பகம் அண்மையில், சென்னை மாநகரில் 16—5—1971ல் துவக்கப்பெற்றது. இப்பதிப்பகத்தின் நோக்கம், உலகிலுள்ள எல்லா மக்களும் அருட்சட்ட நெறி நின்று, அருளாட்சி வழி நடந்து, சாதி, சமய மத பேதமற்று, எங்கும் நின்று இலங்கும் இறை இன்பத்தை யடைந்து உய்வதுவேயாம். மேலும் விரிவுகள் பெற விழைவோர் கீழ்க்கண்ட முகவரி யுடன் தொடர்பு கொள்ளவும்.


**ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்**

**இலக்கியப் பதிப்பகம்**

அடியார்கள் இல்லம் : தொலைபேசி எண் : 34600

32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை

# பேரின்ப வேட்கை



## 1. அழைத்து வாடி, என்னுயிர்த் தோழி !

[தலைவி தோழிக்கு உரைத்தல்]

1. உலகைப் படைத்தவராம் என்னுயிர்த் தோழி—அதை
உவந்து புரப்பவராம் என்னுயிர்த் தோழி
கலகம் தவிர்ப்பவராம் என்னுயிர்த் தோழி—அருட்
காட்சி கொடுப்பவராம் என்னுயிர்த் தோழி

2. என்னை மணந்தனராம் என்னுயிர்த் தோழி—அவர்
என்றென் முனம் வருவார் என்னுயிர்த் தோழி
முன்னை வினைகளெல்லாம் என்னுயிர்த் தோழி—என்று
முடியும் எனமொழிவாய் என்னுயிர்த் தோழி

3. உண்ண மனமுமில்லை என்னுயிர்த் தோழி—நல்ல
உறக்கம் பிடிக்கவில்லை என்னுயிர்த் தோழி
எண்ண அலைகளெல்லாம் என்னுயிர்த் தோழி—என்னுள்
எழும்பிக் குழப்புதடீ என்னுயிர்த் தோழி

4. அன்பர் பிழைகள் எல்லாம் என்னுயிர்த் தோழி—அவர்
அறிந்தும் பொறுப்பவராம் என்னுயிர்த் தோழி
இன்பம் கொடுப்பவராம் என்னுயிர்த் தோழி—அவர்
எங்கும் நிறைந்தவராம் என்னுயிர்த் தோழி

5. என் பிழைகள் கருதி என்னுயிர்த் தோழி—அவர்
என்பால் வரவிலையோ என்னுயிர்த் தோழி
அன்பு நெறியறியேன் என்னுயிர்த் தோழி—அவர்
அதனை அருள்வாரோடீ என்னுயிர்த் தோழி

6. பாலும் கசந்ததடீ என்னுயிர்த் தோழி—நல்ல
பழமும் புளிக்குதடீ என்னுயிர்த் தோழி
காலம் கடக்குதடீ என்னுயிர்த் தோழி—அவர்
கனவில் வருவாரோடீ என்னுயிர்த் தோழி

7. ஒன்றும் புரியவில்லை என்னுயிர்த் தோழி—நீ தான்
ஒருவழி சொல்லிடடீ என்னுயிர்த் தோழி
சென்றிங் கழைத்து வாடீ என்னுயிர்த் தோழி—நீ தான்
செய்நன்றி யைமறவேன் என்னுயிர்த் தோழி

8. கருணை நிறைந்தவராம் என்னுயிர்த் தோழி—அவர்
காட்சியான் காணவேண்டும் என்னுயிர்த் தோழி
மரணம் தவிர்ப்பவராம் என்னுயிர்த் தோழி—அவர்
மனம் ஏன் இரங்கவில்லை என்னுயிர்த் தோழி

9. அனைத்தும் அறிபவராம் என்னுயிர்த் தோழி—என்றன்
அவதி யறியாரோடீ என்னுயிர்த் தோழி
தினைத் துணைச் சிந்தையுண்டேல் என்னுயிர்த் தோழி—
சேர விழையாரோடீ என்னுயிர்த் தோழி [என்னைச்

10. கள்ளமொன்றும் அறியேன் என்னுயிர்த் தோழி-உன்பால்
கரவா துரைத்து விட்டேன் என்னுயிர்த் தோழி
உள்ள நிலையறிந்தே என்னுயிர்த் தோழி—நீ சென்
றொருகால் அழைத்து வாடீ என்னுயிர்த் தோழி

11. உலகர் அறியாரடி என்னுயிர்த் தோழி—என்றன்
உள்ளக் கவலையினை என்னுயிர்த் தோழி
பலகால் மொழிவதென்னே என்னுயிர்த் தோழி—நீ என்
பருவம் அறியாயோடீ என்னுயிர்த் தோழி

12. பேரும் ஊரும் அறியேன் என்னுயிர்த் தோழி—அவர்
பெருமை அளவிலதாம் என்னுயிர்த் தோழி
யாரும் அறியாவண்ணம் என்னுயிர்த் தோழி—அவர்
என்னை யணைவாரோடீ என்னுயிர்த் தோழி

13. ஏகாந்த மாய் அவரோ டென்னுயிர்த் தோழி—நானும்
இருக்க விழைந்தேனடீ என்னுயிர்த் தோழி
மோகாந்த காரத்துள்ளே என்னுயிர்த் தோழி—யானும்
மூழ்கித் தவிக்கிறேண்டீ என்னுயிர்த் தோழி

14. முழுதும் அழகியராம் என்னுயிர்த் தோழி—அவர்
மோன மொழியினராம் என்னுயிர்த் தோழி
பழுது தவிர்ப்பவராம் என்னுயிர்த் தோழி—அருட்
பண்பை யளிப்பவராம் என்னுயிர்த் தோழி

15. பார்த்தால் அவர் அழகை என்னுயிர்த் தோழி—யார்க்கும்
பசி அடங்கி விடுமாம் என்னுயிர்த் தோழி
ஈர்த்தார்வ மோடெனையும் என்னுயிர்த் தோழி—அவர்
என்றனை நந் தின்பருள்வார் என்னுயிர்த் தோழி

16. சற்றுநீ சென்றிடடீ என்னுயிர்த் தோழி—என்றன்
தாபம் உணர்த்திடடீ என்னுயிர்த் தோழி
முற்றும் அவர்க்கடிமை யாகி விட்டேன்—எனல்
மொழிந்திங் கழைத்துவாடி என்னுயிர்த் தோழி

## 2. கருணையை வியத்தல்

1. பூவுலகின் குருவே—அடியவர்
போற்றும் உயர் திருவே
சேவை கொடுத்தெனக்கும்—திருவருள்
செய்ய விழை யரசே

2. பாரின்மிசை யெளியேன்—புரிந்திடும்
பல்பிழை யும் பொறுத்தே
சீருடன் பேணியருள்—புரிந்திடும்
தேசிக மாமணியே

3. அன்பு நெறியறியா—துழலும்
அடிமையை யும் புரந்தே
இன்ப வொளியருள—விழைந்திடும்
என்குரு நாயகமே

4. பற்றனைத் தும்விடுத்தே—நின்னடி
பற்றகி லா எனையும்
சற்றழைத் துன்னருகே—அமர்த்தும்
தயைமிகும் என்பதியே

5. கல்வி யெனும் கடலை—நிகரில்
கருணையினால் கடந்தே
செல்வ மெலாம் அடியார்க்—கருளும்
சிறந்த சிந் தாமணியே

6. சட்டமொன் றைப்புவிக்கே—இனிது
தரும் கரு ணாகரனே
கட்டமெல் லாம் அகற்றி—அடியரைக்
காக்கும் கு ணாகரனே

7. நிட்டையை யேவிரும்பி—அமரும்
நினைவறி யாஎனையும்
நிட்டையி லே அமர்த்தி—அருள
நினைக்கும் நிராமயனே

8. கள்ளம் கபடுமிகும்—எனையும்
கருணையி னால் அழைத்தே
உள்ளம் திருத்தி அருள்—திருவமு
தூட்ட விழைபவனே

9. சிந்தனை சொல் செயலில்—புனிதமில்
தீய பிறவி யெடுத்(து)
இந்த உலகில் உழல்—எனையும்
இனி தழைத்(து) ஆள் இறையே

10. நற்பொருள் நாடறியா—எனையும்
நலமொ டழைத்தருள் செய்
கற்பக மேநின் அருட்—கருணை
கடலின் மிகப் பெரிதே

11. உத்தம வாழ்வறியா—எனையும்
உயர்அரு ளால் அழைத்தே
உத்தமப் பண்பருள—விழையும்
உனைநிகர் வோர் உளரோ

12. ஐம்புல ஆசையுள்ளே—முழுகி
அலையும் அடிமையையும்
செம்பொருள் கண்டுயவே—அழைக்கும்
சிவானந்த வானமு தே

13. காமம் சினம் அகந்தை—மிகுந்து
கலங்கி வருந்தெனையும்
சேமம் அனைத்தும் பெற—வருகெனும்
தெய்வ சிகாமணியே

14. நல்ல தனுவளவும்—புரிந்திட
நாடகி லாளனையும்
நல்ல படி திருத்த—விழைந்தருள்
ஞான சிரோமணியே

15. கண்டபடி திரிந்தே—உலகில்
கணக்கில் பிழை புரியென்
தொண்டினை யும் விரும்பி—அழைத்தருள்
தூய தபோ நிதியே

16. தூய்மை அணுவளவும்—பெருதிவண்
சோர்ந்து கலங்கெனையும்
வாய்மை வளம் சுவைக்க—வருகெனும்
வண்மை மிகும் குருவே

17. புன்மையை யேதினமும்—விழைந்து
பொறி வழி ஏகெனையும்
நன்மை யெலாம் பெறற்கே—அழைத்தருள்
ஞான வரோதயனே

18. அற்ப நினைவுகளே—நினைந்திங்(கு)
அலையும் எளியனையும்
நற்பொருள் பெற்றுயவே—அழைத்தருள்
நான்மறை நாயகனே

19. தூய அருள்மொழியால்—உனைத்தினம்
தோத்தரியா எனையும்
நேயமொ டே யழைத்தின்—னருள் செயும்
நேர்மை மிகுந்தவனே

20. பருதி மதி அனலின்—ஒளிகொள்
படிவமு டன் புவிமேல்
இருடி நகர்தனிலே—திகழும்
இதய மனோகரனே

21. வாயில்மும் மூன்றுடனே—புவியில்
வயங்கென் உடம்பில் உளம்
கோயில் எனக்குடிகொண்—டருள்புரி
கோதில் பரஞ்சுடரே.

## 3. ஆடு பாம்பே

ஆடுபாம்பே—நிமிர்ந்—தாடுபாம்பே
அருட்குரு நாதர்முன்னே ஆடுபாம்பே

1. கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தையும் வல்லார்—அவர்
கோடிசித்து செய்யவல்லார் கோமளம் மிக்கார்
பாடுபட்டுத் தேடிவைத்த செல்வத்தையெல்லாம்
—உண்மைப்
பக்தர்கட்கே அள்ளிநல்கும் பான்மையும் மிக்கார்
நாடுவிட்டு நாடுசெல்ல உன்னை யனுப்பார்—இந்த
நாளிலவர் எண்ணப்படி ஆடுபாம்பே
சூடுபட்டு நொந்திடுமுன் சொல்லியும் வைத்தேன்-அவர்
சூத்திரம்கண் டேஅதைப்போல் ஆடுபாம்பே.
(ஆடு)

2. மாடுமக்கள் செல்வமெல்லாம் மறந்துவிட்டே—அவர்
மாணடியைப் பற்றின்வரம் வேணதளிப்பார்
ஓடும்பொன்னும் ஒக்கநோக்கும் உள்ளமுடைய-மேலோர்க்
குள்ளமர்ந்தே தெள்ளமுதம் ஊட்டிவிடுவார்
காடுகரை யெங்கும்சுற்றிக் களைத்துவிட்டா ய்—இன்னும்
கானகந் தொறுந்திரிதற் கேன்விழைகின்றாய்
வீடுகட்டி வைத்தழைத்தார் நம்குருநாதர்—அவர்
மெய்ப்பதம் பணிந்து நின்றே யாடுபாம்பே. (ஆடு)

3. எல்லாமும் தன்னுள்ளேயே காட்டிட வல்லார்—என்னை
ஏகாந்த மாயழைத்துக் கூடிட வுள்ளார்
நல்லார்க்குள் ளேயருளை நாட்டிட வல்லார்—என்னை
நானறியா வண்ணம்வந்து கூடிட வுள்ளார்
பொல்லார்க்கும் நல்லருள் புரிந்திட வல்லார்—என்றன்
புன்மைதவிர்த் தேயருளாற் கூடிட வுள்ளார்
கல்லார்க்கும் கற்றவர்க்கும் காட்சியளிப்பார்—அவர்
கண்ணசையும் வண்ணம்நின்றே யாடுபாம்பே
(ஆடு)

4. எத்தனையோ காலமாக ஏங்கி யிருந்தோம்—அருள்
எங்குகிட்டப் போகுதென்றும் சோம்பியிருந்தோம்
அத்தனைப் பொழுதும் வீணாய்ப் போச்சுதையோ-இப்போ(து)
அண்ணல்குரு நாதர்அருள் வாய்ச்சுதையோ
மெத்தமகிழ் வோடுநீயும் எழுந்திடுவாய்—குரு
மெய்வழி யனுசரித்தே நிமிர்ந்திடுவாய்
சுத்தபக்தி யால்துதித்து வணங்கிடுவாய்—அவர்
சூத்திரம் அறிந்துநிமிர்ந் திணங்கிடுவாய் (ஆடு)

5. இன்னமும் தலைகீழாய்நீ தொங்கிடவேண்டாம்—இனி
எந்தநாளும் உன்விஷத்தைக் கக்கவும் வேண்டாம்
முன்னமுற்ற தீநெறியை எண்ணவும் வேண்டாம்-இன்னும்
மோகமுற்றுக் கெட்டொழிந்து சாகவும் வேண்டாம்
பொன்னனைய போகம்நல்க நம்குரு வந்தார்—அவர்
பொன்னடியைப் போற்றிநின்றால் பூரணமீவார்
சொன்னபடி கேட்டிசைந்துள் ளாடி யமர்வாய்—குரு
சூத்திரம்கண் டேயுணர்ந்து கூடியிணைவாய் (ஆடு)

6. வாசிவினை வேறும்வண்ணம் ஆடுபாம்பே—அருள்
வள்ளல்திரு நோக்கமறிந் தாடுபாம்பே
மாசிலாதுள் ளம்விளங்க ஆடுபாம்பே—அருள்
மாரிபெய்ய வாழ்வினிக்க ஆடுபாம்பே
நாசிநுனி பார்த்துநின்றே யாடுபாம்பே—நுதல்
நடுவில்ஒளி கூடும்வண்ணம் ஆடுபாம்பே
தேசுசால் மாணிக்கம் காட்டி யாடுபாம்பே—குரு
தேவர்அருட் சொற்படிநின் றாடுபாம்பே (ஆடு)

7. ஆண்டவர் மேவாணையிட்டுச் சொல்லிடலுற்றேன்-இனி
அற்பநினை வோடுமெங்கும் சென்றிடவொட்டேன்
வேண்டும்வரம் நல்கும் அய்யர் ஆணையின்வண்ணம்—சற்றே
விளையாடி நின்றமைதி யெய்துதி பாம்பே
காண்டகு பொருள்களெல்லாம் கண்ணினிற்காணும் - போதில்
கடவுள்மய மாய்விளங்க ஆடுபாம்பே
நீண்டநாளாய் வேண்டிவந்தேன் நீயும்அறிவாய்—இனி
நிச்சல நிலையில்ஓன்றி நில்லுதி பாம்பே (ஆடு)

8. நாரணற்கா சனம்படுக்கை நற்குடையானாய்—அந்த
நான்முகற்கு மேயதனில் பங்குகொடுத்தாய்
காரணனும் ஈசன்முடி மீதில்அமர்ந்தாய்—அவர்
கைகழுத்து மார்பிலணி பூணெனவானாய்
பூரணனும் முன்னவனார்க் குத்தரீயமாய்—அவர்
பூணும் அரை ஞாணெனவும் நன்று பொலிந்தாய்
ஆரணிக்கு மோதிரமாய்க் கங்கணமானாய்—அந்த
அன்னைமுடி மேலும்அமர்ந் தாடிமகிழ்வாய் (ஆடு)

9. பாரில்மிக்க பேரெழிலொ டேபயிலுவாய்—உன்னைப்
பார்ப்பவர் நடுங்கிடப் பயப்படுத்துவாய்
ஏரில்மிகுந் தாயெனினும் யாரும்அணுகார்—ஆனால்
எவ்வுயிர்க்கும் குண்டலியென் றுள்ளமைந்துள்ளாய்
சீரில்மிக்க மந்திரத்தில் கட்டுப்படுவாய்—யாரும்
செப்புசத்ய வாக்கினுக்கும் கட்டுப்படுவாய்
தேரிவேறும் நாதராணை செவ்வையாய் நோக்கி – அவர்
திவ்யநோக்கம் போலமைந்தே ஆடுதிபாம்பே (ஆடு)

10. மூலக் கனல்வளர உதவி செய்வாய்—ஞான
முந்திரையெல் லாம்விளங்கத் துணைபுரிவாய்
காலன் கணக்கெரியக் கவனம்வைப்பாய்—அருள்
கணக்கின் குறிப்பறிந்துள் ளடங்கிநிற்பாய்
சாலப் பரிவுகொண்டே குருபரனார்—திருத்
தாளைப் பணிந்துநின்றே தவம்புரிவாய்
ஞாலமிசை அவர்தம் சட்டநெறியே—பரவ
நாளும் பணிபுரிதற் குறுதிகொள்வாய் (ஆடு)

## 4. பாங்கிமாரே—1.

1. சட்டமளித் தோம்புகின்ருர் பாங்கிமாரே—அவர்
தங்குமிடம் எங்குசொல்வீர் பாங்கிமாரே
இட்டமுட னேமணந்தார் பாங்கிமாரே—அவர்
எப்பொழுதென் னையணைவார் பாங்கிமாரே

2. உள்ளம்குடி கொண்டவராம் பாங்கிமாரே—அவர்
உள்ளவிதம் கண்டறியேன் பாங்கிமாரே
கள்ளமுற்று மேதவிர்ந்தால் பாங்கிமாரே—நன்ருய்க்
காணலாகும் என்றுரைப்பார் பாங்கிமாரே

3. கள்ளம்தவிர் நல்வழியைப் பாங்கிமாரே—எற்குக்
காட்டுவோர்மற் ருருளரோ பாங்கிமாரே
மெள்ளவழி சொல்லுவீரோ பாங்கிமாரே—இன்றே
மேவிஇன்ப மெய்தவேண்டும் பாங்கிமாரே

4. காணமனம் நாடுதிங்கே பாங்கிமாரே—என்றன்
கண்ணுறக்கம் கொள்ளவில்லை பாங்கிமாரே
வேணவரம் நல்குவாராம் பாங்கிமாரே—என்றன்
வேட்கை அவர் ஏன்அறியார் பாங்கிமாரே

5. உண்ணமனம் எண்ணவில்லை பாங்கிமாரே—வேருென்
றுன்னஉளம் நாடவில்லை பாங்கிமாரே
எண்ணவொண்ணு எண்ணமெல்லாம் பாங்கிமாரே
—என்னுள்
எண்ணிஎண்ணி ஏங்குகின்றேன் பாங்கிமாரே

6. கைப்பிடித்த என்கணவர் பாங்கிமாரே—என்னைக்
கட்டியணைத் தால்மகிழ்வேன் பாங்கிமாரே
பொய்ப்பொருளில் இன்பமுண்டோ பாங்கிமாரே—அவர்
பொன்னடியில் இன்பமுண்டாம் பாங்கிமாரே

7. சொல்லவொண்ணுப் பேரழகர் பாங்கிமாரே—என்முன்
தோன்றியணைத் தால்களிப்பேன் பாங்கிமாரே
வல்லவர்க்கும் வல்லவராம் பாங்கிமாரே—அவர்
வந்தருள்நாள் என்றுசொல்வீர் பாங்கிமாரே

8. என்னுடம்பும் என்னுயிரும் பாங்கிமாரே—அவர்
இன்னடிக்கே அர்ப்பணமாம் பாங்கிமாரே
என்னை யவர் கூடிடுங்கால் பாங்கிமாரே—யானும்
என்னைமறந் தின்புறுவேன் பாங்கிமாரே

9. எல்லையில்பே ரின்பம்நல்கப் பாங்கிமாரே—அவர்
எப்பொழுதிங் கேவருவார் பாங்கிமாரே
கல்லையொத்த என்னுளமும் பாங்கிமாரே—அவர்க்காக்
கசிந்து கரைந்ததன்றே பாங்கிமாரே

10. அன்பொடவர் வந்திடுவார் என்றுநம்பி—இங்கே
ஆவலுடன் காத்திருப்பேன் பாங்கிமாரே
இன்பவடிவாளர்அவர் என்னையணைந்—தொப்பில்
இன்பமுத மூட்டிடுவார் பாங்கிமாரே.

## 5. பாங்கிமாரே — 2.

1. தோரணங்கள் கட்டிடுவீர் பாங்கிமாரே—நல்ல
சோபனங்கள் பாடிடுவீர் பாங்கிமாரே
பூரணகும் பம்அமைப்பீர் பாங்கிமாரே—கையில்
பொற்கவரி தாங்கிநிற்பீர் பாங்கிமாரே

2. பொம்மைவிளக் கேற்றிவைப்பீர் பாங்கிமாரே—மணப்
புட்பப்பந்தல் போட்டிடுவீர் பாங்கிமாரே
மும்மைமலம் நீக்கிடுவோர் வந்தருள்செய்வார்—வாயில்
முன்புநின் றழைத்துவாரீர் பாங்கிமாரே

3. சத்தனம் புட்பம்பனிநீர் தாங்கிநிற்பீர்—பழம்
சர்க்கரைகற் கண்டடைக்காய் தாங்கிநிற்பீர்
கந்தமிக்க குங்கிலியம் கமழவைப்பீர்—ஒளிக்
கண்ணாடிகை தாங்கி நிற்பீர் பாங்கிமாரே

4. மங்களநல் வாத்தியங்கள் முழங்கச்செய்வீர்—வீணை
மத்தளதா ளத்துடனே பாடிடச்செய்வீர்
மங்கையர் களிநடனம் ஆடிடச்செய்வீர்—மணி
மாடமெங்கும் திருவிளக் கேற்றிடச்செய்வீர்

5. மஞ்சனச்சா லையில்பன்னீர் தேக்கிவைப்பீர்—நல்ல
மஞ்சனப் பொடிகளாதி அமைத்துவைப்பீர்
விஞ்செழில்கொள் துண்டுடனே பட்டுவத்திரம்—தூய
வெண்மையுள்ள தாகவேபார்த் தெடுத்துவைப்பீர்

6. வாசனைப் பொருள்களெல்லாம் அள்ளிக்கொணர்வீர்
—அண்ணல்
வண்ணமேனி மீதுபூச அருகில்வைப்பீர்
பூசனைக் குரியவெல்லாம் கொண்டுவருவீர்—அவர்
பொன்னடிக்குப் பூசைசெய்தற் கிங்ஙனே வைப்பீர்

7. தங்கச்சிங்க ஆசனத்தைச் சதுருடனே—இங்கு
சப்ரமமாக அமைத்தே அலங்கரிப்பீர்
தங்கக்கிண்ண மொன்றினில்பால் கொணர்ந்துவைப்பீர்
தாம்பாளத்தி னில்பழமும் கற்கண்டும்வைப்பீர் [—ஒரு

8. வீணையை எடுத்துநன்ருய்த் துடைத்துவைப்பீர்-வெள்ளை
வெற்றிலைதாம் பூலமெல்லாம் கொணர்ந்து வைப்பீர்
ஆணையிடும் வண்ணமெல்லாம் ஆவனசெய்வீர்-உள்ளே
அற்புதமாக அமுதைச் சமைத்துவைப்பீர்

9. ஆசனம் மயில்விசிறி யாவும்கொணர்வீர்—அவர்க்
கானநற்பா னீயமெல்லாம் கொணர்ந்துவைப்பீர்
கூசிடாமற் பண்டமெல்லாம் கொணர்ந்துவைப்பீர் — சுவை
கூடிடும்தின் பண்டமெல்லாம் கொணர்ந்து வைப்பீர்

10. தங்கம்ணிக் கட்டிலையும் துடைத்துவைப்பீர்—புட்பச்
சரங்கள் தொடுத்து நன்றே அலங்கரிப்பீர்
துங்கமான பஞ்சணையை விரித்திடுவீர்—எழில்
துள்ளுபல மேல்விரிப்பும் விரித்திடுவீர்

11. காம்பரிந்த் முல்லைமலர் பரப்பிடுவீர்—மணம்
கமழும்பன் னீரும்நன்றே தெளித்திடுவீர்
மேம்படும் எழிலுடைய திண்டுதலை—யணை
மிருதுவா யுள்ளனகண் டமைத்திடுவீர்

12. தீபமும் விளக்கமுறப் பொருத்திவைப்பீர்—அருட்
செம்மைநிறைய அறையை அலங்கரிப்பீர்
தூபம்கம ழப்புரிவீர் அன்புடனே—அவர்
தூயஅருட் பாடல்கள்மெல் லெனஇசைப்பீர்

13. ஆண்டவர்வந்த வுடனே நீவிரெல்லாம்—அவர்
அருட்குறிப் பின்வழியே ஏவல்செய்வீர்
ஆண்டவர்இங் கென்னுடனே தனித்திருக்க—எண்ணில்
அணேவோரு மேபுறத்திற் சென்றமைவீர்

14. நாதர்நல் வரவைநிணந் தென்மனம் துள்ளும்—அவர்
நாமம்நவில் போதினில்என் நாவுமினிக்கும்
பூதவுடல் முழுவதும் புல்லரிக்கும்—அருட்
போதவிளே வெய்துமென்றே பொங்கிமகிழும்

15. ஞானமண மேகமழ்வுற் றெங்கும்பரவும்—இனி
நானெனதென் றுள்ளபற்றும் அழிந்தொழியும்
மோனநிலே யேவிளங்கும் முத்தியின்பமும்—கூடும்
மூலமலங் கள்தொலேயும் மோகமழியும்

16. ஆண்டவரும் யானுமிங்கே தனித்திருக்கும்—போதில்
ஆரும்சப்தம் செய்திடாமல் அமைதிகொள்வீர்
வேண்டும்வரம் உங்களுக்கும் வழங்கிடுவார்—நீவிர்
விழிப்போ டிருந்துளத்தால் போற்றிசெய்வீர்

17. யாரும்உள்ளே எய்திடாமற் காவல்செய்வீர்-ஏமாந்(து)
எள்ளளவும் தூங்கிடாமற் காவல்செய்வீர்
ஊருள்ளோருக் கிந்தச்செய்தி சொல்லிடவெண்டாம்-உங்கள்
உள்ளத்தில்வைத் தேயினிது பத்திரம்செய்வீர்

18. அங்குமிங்கும் சிந்தையின்றி மிக்க உன்னிப்பாய்—பணி
அத்தனையும் செய்யவேண்டும் பாங்கிமாரே
கங்குல்பகல் என்பதின்றிப் பாங்கிமாரே—முழுக்
கருத்தோ டுழைக்கவேண்டும் பாங்கிமாரே

19. எத்தனேயோ ஜென்மமாய்முன் செய்ததவத்தால்-நீவிர்
இவ்விடத்திற் பாங்கிமாராய் வந்தமர்ந்துள்ளீர்
அத்தனேயும் எண்ணிப்பய பக்தியுடனே—மேலாம்
ஆண்டவர் பணியனைத்தும் நன்றுபுரிவீர்

20, துங்கமிகு நல்லறிவு பெற்றுள நீவிர்—எல்லாம்
சொன்னவண்ணம் எப்பணியும் செவ்வையாய்ச் செய்வீர்
உங்களுக்கின் னும்அதிகம் சொல்லவேண்டுமோ — யாவும்
உண்மையன்பொ டேயினிது செய்வீரல்லவோ

21. ஆகையினு லேஇனிமேல் பாங்கிமாரே—அரு
ளாண்டவர் வரவைஎதிர் நோக்கிநிற்பீர்
ஓகையினே டேயவரின் னருட்புகழை—அன்பால்
ஓதிநின் றுளம்கசிந்தே உருகிநிற்பீர்

## 6. உடல் பொருள் ஆவி அர்ப்பணம்

[பல்லவி]

உடல்பொருள் ஆவிமூன்றும் உனக்கே அர்ப்பணம் செய்தேன்
உத்தம குருநாதனே

[சரணம்]

1. உடலை நீ படைத்திட்டாய் உயிர்ப்பையுள் புகுத்திட்டாய்
அடலுற வளர்த்திட்டாய் அரும்பொருள் அளித்திட்டாய்
கடலாம்நின் கருணையில் சிறுதுளி யளித்திட்டால்
கடையேன் கடைத்தேறுவேன், கடைக்கண்ணுேக் களித்தாள்வாய் (உடல்)

2. புடவியாய் வானுய்க்காலாய்ப் புனலாய் நெருப்புமானுய்
சுடர்விடும் கதிர்மதி விண்மீனுய் ஒளிர்கின்ருய்
இடர்தவிர்த் தடியரை இனிதே புரந்தாள்கின்ருய்
அடர்புலப் பகையைவெல் அன்பை வழங்கி யாள்வாய் (உடல்)

3. செப்பரும் பலபிழை செய்த கொடியனேனும்
இப்பொழு துணைநாடி ஏங்கித் தொழுதழுதேன்
ஒப்புயர் வற்றிலங்கி உண்மை யொளிவிளக்கி
இப்புவி யினிற்சட்டம் ஈந்தாள வந்தகோவே (உடல்)

4. இருடிநன் னகரினில் இனிதே அவதரித்தாய்
திருடியென் னுளம்கொண்ட தேசிக ரத்தினமே
பருதி பல கோடிபோல் படரும் சுகோதயமே
சுருதி முதல்முடிவே தொண்டனேற் கருள்செய்வாய்
(உடல்)

## 7. தண்ணருள் செய்வாய்

[பல்லவி]

தண்ணருள் செய்வாய்—கடைக்
கண்ணருள் செய்வாய்

[அநுபல்லவி]

விண்ணவர் மண்ணவர் வேண்டி வழுத்திடும்
அண்ணலே ஆனந்த மானசொரூபனே (தண்)

[சரணம்]

1, எண்ணில் முனிவரர் இன்பமாய் வாழ்த்திட
பண்ணினுல் பாவலர் பாடித் துதித்திட
உண்ணினைந் தேயன்பர் உள்ளம் உருகிடத்
திண்ணமாய் நல்லருள் செய்ய உதித்தோனே (தண்)

2. சட்டமென் ருேர்நெறி தந்த தயாளனே
திட்டம் வகுத்தடி யார்க்கருள் செய்வோனே
அட்டமூர்த் தியாய் அகம்புறம் ஆனேனே
கட்ட மனைத்தும் களைந்து காக் கின்ருேனே (தண்)

3. என்னைத் தடுத்தாளற் குன்னைக் கொடுத்தோனே
பின்னை யுண்டாகும் பிறப்பைத் தடுத்தோனே
பொன்னையொத் தென்னுள் பொலியும் ஒளியோனே
முன்னை வினைகளை மோசித் தருள்வோனே (தண்)

4. நாதாந்த நாட்டில் நடன மிடுவோனே
போதாந்த வீட்டில் பொலிந்து திகழ்வோனே
வேதாந்த சித்தாந்த மாகி விளைவோனே
மூதாண்ட கோடிக ளாக முளைத்தோனே (தண்)

5. ஆதியந் தம்ஒன்றும் காணற் கரியோனே
ஜோதி வடிவொடுள் தோன்றி யொளிர்வோனே
நீதி வடிவொடெங் குந்திகழ் நேயனே
பூதி தீர்த்தத்தால் புனிதம்செய் போதனே (தண்)

6. கங்கு கரையில்லாக் கருணைக் கடலின்கண்
பொங்கும் அமுதைப் புனிதர்க் கருள்வோனே
மங்குல் போலச்சூழும் மாயை தவிர்ப்போனே
துங்கமெய்ஞ் ஞானமாம் சூரியன் ஆனேனே (தண்)

7. காலம் அனைத்தும் கடந்தொளிர் கர்த்தனே
மூலம் நடுமுடி வாயொளிர் முத்தனே
சீலம் அனைத்தும் செப்பியொளிர் சித்தனே
ஆலம் அமுதென ஆக்கும்என் னத்தனே (தண்)

8. கங்கையை எங்குமே காலையிற் காட்டினை
சங்கையை உள்ளத்தில் தங்கிடா தோட்டினை
உங்கையிற் பிள்ளையான் என்ப துணர்த்தினை
அங்கை நெல் லிக்கனி யாகத் திகழ்ந்தனை (தண்)

9. கற்பனை கள்யாவும் காண அறியாநின்
பொற்பனைத் தும்யான் புகலற் கெளியதோ
அற்புதச் சற்குரு வாகி அவனிமேல்
சிற்பர நீவந்த செய்திஎங் கும்சொல்லத் (தண்)

10. எங்கும் நின்சட்டம் இலங்க விழைகிறேன்
பொங்கும்நின் தண்ணருள் போற்ற விழைகிறேன்
கங்குல் பகலில்நின் காட்சி யருளுவாய்
கொங்கலர் சூழ்நின் குரைகழல் கூட்டுவாய் (தண்)

## 8. அந்தராத்மனே

[பல்லவி]

அந்த ராத்மனே—என்றன்—சொந்த நாதனே (அந்த)

[அநுபல்லவி]

அத்தமொ டாதியில் லாஅருட் ஜோதியே
அண்டம் அனைத்திலும் மேவுநன் னீதியே (அந்த)

[சரணம்]

1' செந்தமி ழாதி பலமொழி யானேனே
தேவரும் மூவரு மாகிப் பொலிவோனே
முந்தை வினையுடன் மும்மலம் மாய்ப்போனே
மோன அமைதியும் முத்தியும் ஈவோனே (அந்த)

2. எங்கெங்கும் மேவி இலங்கும் இறைவனே
என்னுள் ஒளிமய மாயமை ஏகனே
அங்கிங்கெ னுதனு வுக்கனு வானேனே
ஆரணம் ஆகமம் ஆகிப் பொலிவோனே (அந்த)

3. சிற்பர வ்யோமமாம் சிற்றம்ப லத்தினில்
தெய்வத் திருநடம் செய்யும் விமலனே
பொற்புறு சட்டம் புவிக்கண் அருள் வோனே
பூதலத் தெண்ணில் உயிரைப் புரப்போனே
(அந்த)

4. காதலுற் றேகசிந் துள்ளம் உருகுவோர்
காதலனுகிக் கருணை சுரப்போனே
சாதல் பிறத்தல் தவிர்த்தருள் செய்வோனே
சத்தாகிச் சித்தாய்ச் சதானந்த மானேனே
(அந்த)

5. சித்திரம் சிற்பமும் ஆகித் திகழ்வோனே
செல்வம் அனைத்தும் செழிக்க அருள்வோனே
புத்தியில் உண்மை புகட்டிப் பொலிவோனே
பூரணம் மேவமெய்ப் போதம் அருள்வோனே (அந்)

6. காணற்கரிய கவின்பே ரழகனே
காணற்கு மெய்ஞ்ஞானக் கண்ணருள் கர்த்தனே
பூணற்கரிய பொறுமை அருள்வோனே
போக்கு வரவில்பே ராக்கம் அருள்வோனே (அந்த)

7. மாயை யனைத்தையும் மாய்த்தரு கீர்ப்போனே
மங்கல நாணென்றைச் சூட்டி மணப்போனே
சாயை எனும்என்னைத் தழுவி யணைப்போனே
சாந்த நிறைவை வழங்கி இணைவோனே (அந்த)

8. கல்லைக் கனியாக்க வல்ல கலைஞனே
கண்டறி யாப்பல காட்சிகாட் டன்பனே
வெல்லற் கரிய புலனைவெல் லச்செய்தே
வேதாந்த வீட்டில் விளங்கச்செய் பண்பனே (அந்)

9. மூலாதா ரக்கனல் மூளச்செய் கின்றோனே
மோகம் மதம்காமம் வேகத் தகிப்போனே
ஆலாஹலம் அமு தாகச்செய் அய்யனே
ஆனந்த பூர்த்தி அளித்தருள் மெய்யனே (அந்த)

10. கைம்மலர் என்சிரம் மீதிற் பதிப்போனே
காரண காரியம் காட்டி யழைப்போனே
செம்மலர் நோன்ருளிற் சேரப் பணிப்போனே
செப்பற் கரும்பர மானந்த மீவோனே (அந்த)

11. சந்தை உலகெனச் சாற்றும் தலைவனே
சற்றும் எனைப்பிரி யாநற் றுணைவனே
சிந்தை மகிழச்செய் பேரின்பச் செல்வனே
சேர்த்தொன்று ளொன்ருச்செய் யும்என் கொழுநனே
(அந்த)

## 9. ஞான விழி அருளுவாய்

(பல்லவி)

ஞான விழி யருளுவாய்—குருநாதனே
ஞானவிழி யருளுவாய்

(அநுபல்லவி)

வானவெளியினில் வதியும் கதிர்மதிவிண்
மீனின் திரளினும் மேலாகத் திகழ்ந்திடுமெய்ஞ்
(ஞான)

(சரணம்)

1. தானம் தவம்விரத மாதி புரிந்திடுவோர்
சத்ய நெறியினின்றும் சற்றும் தவருத்தூயோர்
மோனம் பெறமுயல்வோர் முத்தி நிலை விழைவோர்
மூலக் கனல்வளர்ப்போர் ஞாலத் தொளிரவைக்கும்
(ஞான)

2. கானம் விரும்பிச் சென்று காமாதி கள்தவிர்ந்து
கர்த்தன் அருள்விழைந்து நித்யம் பெறமுயன்று
பானம் கரும்பிரதம் பற்பல் கனியிரதம்
பால்தேன் எனும்அமு தருந்தும் பெரியர்பெறு (ஞான)

3. ஊனம் தவிர்ந்துன் உற வொன்றே சிறந்ததென்றுள்
ஒளிரும் பரப்பிரம்ம ஒளியைக் காணவிழைந்து
மானம் புவிபொன்னொடு மாதர் நசைதுறந்து
மாண்பார் குருநெறி நிற்கும்சீ ரியர்கள்பெறு (ஞான)

## 10. அருள் வடிவாய் ஒளிர் பாதம்

(ஆனந்தக் களிப்பு)

அருள்வடி வாயொளிர் பாதம்—பர
மானந்த மான அருட்குரு பாதம் (அருள்)

1. பொருள்யாவும் நல்கிடும் பாதம்—மேலாம்
போகம் அனைத்தும் புகட்டியாள் பாதம்
தெருள்வடி வாயெளிர் பாதம்—தன்னைச்
சேர்ந்தார்க் கருள்ஞானச் செல்வமாம் பாதம் (அருள்)

2. மருள்நீக்கி வாழ்விக்கும் பாதம்—சட்ட
மாண்பினை நன்று விளக்கிடும் பாதம்
இருள்தீக்கி ஒளிநல்கும் பாதம்—என்னை
எப்படி யோஇழுத் தாட்கொள்ளும் பாதம் (அருள்)

3. உருள்பிறப் பையோட்டும் பாதம்—யாரும்
உய்யும் வழியை உணர்த்தும்ஒண் பாதம்
வெருளல் தவிர்த்தாளும் பாதம்—ஞான
வேட்கை யளித்துள் விளங்கிடும் பாதம் (அருள்)

4. செக்கச் சிவந்தசெம் பாதம்—எண்ணில்
தேவரும் யாவரும் தேடிடும் பாதம்
தக்கவர்க் குள்ளொளிர் பாதம்—என்னைத்
தானாக்கிக் கொள்ள விரும்பும்பொற் பாதம் (அருள்)

5. அருவுரு வாயொளிர் பாதம்—என்றன்
ஆருயிர்க் கோருயி ராயமை பாதம்
திருவுரு வாயொளிர் பாதம்—இந்தச்
செகமிசை சட்டம் தரப்போந்த பாதம் (அருள்)

6. சிந்தைக் கினியசெம் பாதம்—இங்கு
செத்தாரை மீள எழுப்பிடும் பாதம்
முந்தை வினை நீக்கும் பாதம்—தூய
மோன வெளிக்குள் ளொளியான பாதம் (அருள்)

7. பந்தம் தவிர்த்தருள் பாதம்—யானும்
பாழாகா வண்ணம் பரிந்தருள் பாதம்
அந்தம் முதல்இல் லாப் பாதம்—என்னை
அருகழைத் தானந்த அமுதருள் பாதம் (அருள்)

8. சத்துட்சத் தாயமை பாதம்—என்றன்
சந்தேகம் எல்லாம் தவிர்த்தருள் பாதம்
சித்தெல்லாம் செய்யும்பொற் பாதம்—என்னைச்
சேர்த்தணைத் தின்பச் செழிப்பருள் பாதம் (அருள்)

9. பத்தி விளைவிக்கும் பாதம்—பரி
பக்குவம் செய்தருள் பாலிக்கும் பாதம்
முத்தி யளித்தருள் பாதம்—என்றன்
மூல மலங்கள் பொசுங்கச் செய் பாதம் (அருள்)

10. காலனை வீட்டிய பாதம்—உயர்
கருணை மழையைப் பொழிந்திடும் பாதம்
சீலம் மிகச்செய்யும் பாதம்—தில்லைச்
சிற்சபை யில்நடம் செய்திடும் பாதம் (அருள்)

11. எட்டுரு வாயொளிர் பாதம்—எங்ஙன்
யார்வேண்டி னாலும் விரைந்துசெல் பாதம்
இட்டுண்போ ரைத்தாங்கும் பாதம்—எங்கும்
ஏகாந்த மாகி இலங்கிடும் பாதம் (அருள்)

12. வேதம் அனைத்துமாம் பாதம்—உயர்
வேதச் சிலம்பணி வித்தகப் பாதம்
வேதப் பொருள் அருள் பாதம்—ஒப்பில்
வேதாந்த மாகி விளங்கிடும் பாதம் (அருள்)

13. சாத்திரம் யாவுமாம் பாதம்—எண்ணில்
சாத்திரத் துட்பொரு ளாயமை பாதம்
பாத்திரம் பார்த்தருள் பாதம்—உண்மைப்
பத்தர்க் கருள்வளம் பாலிக்கும் பாதம் (அருள்)

14. குற்றம் பொறுத்தருள் பாதம்—எண்ணில்
கோடியண் டங்களை ஆளும்பொற் பாதம்
சுற்றம் எனச்சூழும் பாதம்—மிக்க
சொந்தம் பாராட்டியுட் சூழ்ந்தொளிர் பாதம்
(அருள்)

15. கோடி கதிர்நிகர் பாதம்—சற்றும்
கோடா உளத்திற் குடிகொள்ளும் பாதம்
தேடி அடியவர் இல்லம்—சென்று
சேர்ந்து திருக்காட்சி நல்கிடும் பாதம் (அருள்)

16. பொன்போற் பொலிந்திடும் பாதம்—இக
போகமும் போதமும் ஊட்டிடும் பாதம்
அன்போ டணைத்திடும் பாதம்—பூர
ஞானந்தம் எவ்வுயிர்க் கும் தரும் பாதம் (அருள்)

## 11. சற்குரு நாத! சரணம்! சரணம்!!

சற்குருநாத சற்குருநாத சற்குருநாத சரணம் சரணம்
சிற்குருநாத சிற்குருநாத சிற்குருநாத சரணம் சரணம்

ஓம்குருநாத ஓம்குருநாத ஓம்குருநாத சரணம் சரணம்
ஸ்ரீகுருநாத ஸ்ரீகுருநாத ஸ்ரீகுருநாத சரணம் சரணம்

தவகுருநாத தவகுருநாத தவகுருநாத சரணம் சரணம்
சிவகுருநாத சிவகுருநாத சிவகுருநாத சரணம் சரணம்

தத்துவமாதி தொட்டறியாத சற்குருநாத சரணம் சரணம்
சத்துவரூப முற்றொளிர்போத சற்குருநாத சரணம் சரணம்

சத்தியஞான முற்றியமோன சற்குருநாத சரணம் சரணம்
சித்திகள்யாவு முற்றநல்யோக சற்குருநாத சரணம் சரணம்

பத்தியமோதிப் பக்குவம்நல்கு சற்குருநாத சரணம் சரணம்
நித்தியவாழ்வு துய்த்திடவோது சற்குருநாத சரணம் சரணம்

பத்தியிலேக நற்றுறைகூறு சற்குருநாத சரணம் சரணம்
முத்தியைநாட வைத்தருள்தூய சற்குருநாத சரணம் சரணம்

அத்தனுமாகி அன்னையுமான சற்குருநாத சரணம் சரணம்
முத்தர்கள்தூய சித்தமுலாவு சற்குருநாத சரணம் சரணம்

---

கிடைக்கும் இடங்கள் :

1. **ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சந்நிதானம்**
இரெட்டியப்பட்டி, நாகலாபுரம் அஞ்சல்,
கோவில்பட்டி வழி, (திருநெல்வேலி மாவட்டம்.)

2. **ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்,**
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, **சென்னை-1.**

3. **ஸ்ரீ R. இராமலிங்கம் B.A.,**
தொலைபேசி : 31018
பிஸினெஸ் பிரமோட்டர்ஸ், செல்வ விருத்தி பில்டிங்ஸ்
115, டாக்டர் நஞ்சப்பாரோடு, **கோயம்புத்தூர்-18.**

4. **ஸ்ரீ K. திருநாவுக்கரசு செட்டியார்**
93, கூடலூர் செங்கல்வராய முதலித் தெரு,
**வேலூர்,** (வட ஆற்காடு மாவட்டம்.)

5. **ஸ்ரீ R. அயில் நாயுடு, 'நந்தினி டைமண்ஸ்'**
தொலைபேசி : 6780
54, ஜாபர்ஸா வீதி, **திருச்சிராப்பள்ளி-8.**

